[6th February 1959

Sri K. SATTANATHA KARAYALAR : இந்தப் பணம் செலவழிக்க பட்டுள்ளதா ? வேலை ஆரம்பிக்கப்பட்டுள்ளதா ?

The Hon. Sri. C. SUBRAMANIAM : எந்த இடத்தில் கட்டுவது என்று முடிவாகி தயாராகிக் கொண்டிருக்கிறது. கூடிய சீக்கிரம் வேலை ஆரம்பமாகும்.

*Minister's Pada Yatra*

* 72 *Q*—Sri .A. GOVINDASAMY : *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—*

(அ) 1958–ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் அமைச்சர்கள் பாத யாத்திரை சென்ற சமயத்தில் பிரயாணப்படி வாங்கினார்களா ?

(ஆ) அமைச்சர்கள் பாத யாத்திரை சென்ற சமயம் சர்க்கார் அதி காரிகள் அவர்களுடன் வந்தார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) The following Ministers undertook " Pada Yatra " in October 1958 :—

Minister (Finance).

Minister (Home).

Minister (Revenue).

Minister (Works).

They did not draw any travelling allowance.

(*b*) The District Welfare Officer and the Officials of the Public Works and Highways Departments accompanied the Minister for Works when the latter went on " Pada Yatra ". Government officials did not accompany the other Ministers when they went on " Pada Yatra ".

Sri A. GOVINDASAMY : பாத யாத்திரை போவதாக சொல்லிய ஒரு அமைச்சர் சென்னையிலிருந்து பூந்தமல்லி வரை காரில் சென்று அங்கிருந்து மாங்காடு வரை நடந்து அங்கு டிபன் சாப்பிட்டுவிட்டு, அங் கிருந்து குன்றத்தூருக்குச் சென்று சாப்பிட்டு விட்டு பின்னர் காரில் திரும்பி விட்டார் என்று சொல்கிறார்கள். இதுதான் பாத யாத்திரையா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : பாத யாத்திரை என்றால் நடப்பது. அவ்வளவுதான். கோவிந்தசாமி சொன்னதிலிருந்து, அவர் நடந்தி ருக்கிறார் என்று தெரிகிறது.

Srimathi KAMALAMBUJA AMMAL : பாத யாத்திரை என்றால் சென்னையிலிருந்து அவரது தொகுதி வரை நடந்து போகவேண்டு மென்பதா அங்கத்தினர் அபிப்பிராயம் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : பாதயாத்திரை எப்படி செய்ய வேண்டுமென்பதுபற்றி விதி ஒன்றும் கிடையாது. அவரவர்கள் உடம்பு சௌகரியப்படி செய்யலாம்.

*' We Tamil ' Movement*

* 73 *Q*.—Sri A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the attention of the Government has been drawn to the agitation by the leaders of the ' We Tamil ' Movement to burn the map of India; and